(ஆ) அப்படியானால் இதன் நகல் ஒன்று அசெம்பளி நூல் நிலையத்தில் வைக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Land revenue*

* 27 *Q*.—SRI P. G. MANICKAM : லேண்ட்ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) "Land Revenue" வரியை உரிய காலத்தில் வசூல் செய்த அதிகாரிகளுக்குப் பரிசு வழங்கப்படும் திட்டம் அமுல் நடத்தப்பட்டு வருகிறதா ?

(ஆ) அப்படியானால், 1959, 1960-ல் எந்தெந்த ஜில்லா அதிகாரிகளுக்கு இப்பரிசுகள் வழங்கப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No Sir

(*b*) Does not arise.

*Untouchability*

* 273 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) தீண்டாமைக் கொடுமைகளை எடுத்துக்காட்டும் எத்தனை வித சுவரொட்டி விளம்பரங்கள் 1960-61-ஆம் வருடத்தில் வெளியிடப்படும் ?

(ஆ) ஒவ்வொரு சுவரொட்டி விளம்பரத்திலும் எவ்வித மான தீண்டாமைக் கொடுமைகளைத் தெரியப்படுத்தும் படங்கள் வரையப்படும் ?

(இ) தீண்டாமைக் கொடுமைகளை விளம்பரப்படுத்த வேறு முறைகளும் கையாளப்படுமா ?

(ஈ) அவ்வாறாயின், அதன் விவரங்கள் யாவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Two different posters on the evils of untouchability are to be produced during 1960--61.

(*b*) It will be of general nature.

(*c*) Yes, Sir.

(*d*) Staging of dramas, etc.

SRI P. G. MANICKAM : இதற்காக எவ்வளவு தொகை செலவிட திட்டமிடப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 1960-61ல் ரூ. 25,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது.

SRI K. B. S. MANI : இந்த சுவரொட்டிகள் மூலம் தீண்டாமையை ஒழித்து விடலாம் என்று கருதி இந்த சுவரொட்டிகளின் வழி விளம்பரப்படுத்துவது அவசியம்தானா என்று பரிசீலனை

18th August 1960]

செய்து அதை மாற்றி பிரசாரத் துறை போன்ற மற்ற செயல் முறையில் அந்தப் பணத்தைச் செலவழிக்க அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாம், ஒரு காரியத்தால் மட்டும் இதில் வெற்றி அடைய முடியாது. வெவ்வேறு முயற்சி எடுக்க வேண்டியதாகயிருக்கிறது. இந்த முயற்சியும் சிறிதளவு பலன் அளிக்கும் என்ற முடிவிற்கு வந்து இதை ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

SRI A. GOVINDASAMY : இந்த சுவரொட்டிகள் பொது இடங்களில் ஒட்டப்படுமா ? அல்லது அரசாங்கக் காரியாலயங்களில் மட்டும் ஒட்டப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பொது இடங்களிலும் ஒட்டப்படும்.

SRI T. S. RAMASWAMI : Sir, there are places in our State where untouchability is past history and where these posters will only remind ancient history and it is almost an anachronism. So, will the Government think of not pasting these posters in those areas?

THE HON. SRI C. SUBRAMANIAM : Posters will be prepared in such a way that they will not remind them of the past, but will give hope for the future.

SRI P. G. MANICKAM : தீண்டாமைக் கொடுமைகளை சினிமா மூலம் விளக்குவதற்கு சர்க்காருக்குத் திட்டமிருப்பின் அதன் விவரங்கள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சினிமா எடுக்கிறதாக இப்பொழுது உத்தேசமில்லை. ஆனால் டிராமாக்கள் மூலம் இதைப் பரப்புவதாக உத்தேசம்.

SRI A. GOVINDASAMY : இதுவரையில் அடித்த சுவரொட்டிகளை பொது இடங்களில் ஒட்டாததின் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பொது இடம் என்றால் எது என்று தெரியவில்லை "பப்ளிக்" போகிற இடங்களில்தான் இதை ஒட்டியிருக்கிறது.

*Electrification of Taluk offices*

* 274 Q.—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

1960-61-ல் தாலூகாக்களிலுள்ள எத்தனை காரியாலயங்களிலே மின்சார விளக்குகள் போட எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது ?